# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

விகாரி – வைகாசி – 2019 – மே

நாச்சியப்ப சுவாமிகள் பாலிடெக்னிக் கல்லூரி மாணவர்களுக்குப்
பணிநியமன ஆணை வழங்கும் விழா

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

விகாரி - வைகாசி - 2019 - மே இதழ் - 83

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்).
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்".
7G. ஜவஹர் தெரு. நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

## பொருளடக்கம்



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்

# இறை வணக்கம்




புனலேந்து தலையானைப் பொன்மேரு நாயகனைப்
பூங்கொன்றைத் தாரனைப் பூவின் மேலோன்
போற்றிசெய அருள்வானைப் புனித னான
புண்ணியனை வன்னிவனம் போந்த தேவை
அனலேந்து கையானை அம்புலியைச் சிரசணிந்த
அடலேற்றைக் கொல்புலித்தோல் அணிந்தான் தன்னை
அடிதேடும் மாயனுக்கே அருளி னானை
அம்புவியைத் தானளந்தான் தங்காய் வன்னி
வனந்தேடி வந்தமயில் என்றுதினம் உன்னடியை
வணங்கிவரம் வேண்டுவதால் வாழ்வில் இன்பம்
வருமென்று எண்ணுகிறோம் சூல மேந்தி
வருந்தாயே வருந்தாதே என்று கேட்பார்
மனந்தேடி வந்தமர்ந்த மாதங்கி திரிசூலி
மங்கலைநற் கொற்றவையே உனைவ ணங்கி
மாநிலத்தில் பெரும்பேறு பெற்றோம் நாங்கள்
மாறாதே அருள்வழங்கு மகிழ்ந்து வாழ்வோம்!

*– காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்*

# ஆசியுரை

**சீர் வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள்**

நம் நாட்டில் முன்பெல்லாம் முறையாகத் திட்டங்களை வகுத்து அவற்றைச் செயல்முறைப்படுத்துவதும் புதிய விதிமுறைகளை விதித்தால் அதனை நடைமுறைக்குக் கொண்டு வருவதற்குப் போதிய அவகாசம் தந்தும் பொதுமக்களுக்கு ஏற்படக்கூடிய சிரமங்களைத் தவிர்த்து வந்தார்கள்.

ஆனால் இப்பொழுது மத்திய அரசும் மாநில அரசும் பல சட்டங்களையும் விதிமுறைகளையும் அறிவித்து அவற்றை உடனடியாக நடைமுறைப்படுத்தக் கட்டாயப்படுத்துகிறார்கள்.

குறிப்பாக, கல்வித் துறையில் அதிகமான குறுக்கீடுகள் ஏற்படுகின்றன. திடீர் திடீர் என்று விதிமுறைகளையும் பாடத்திட்டங்களையும் மாற்றி நடப்புக் கல்வி ஆண்டில் இருந்து இதனை நடைமுறைப்படுத்த வேண்டும் என்று கட்டாயப்படுத்துகிறார்கள். அதிலும் சமீபத்தில் மாநில அரசு தனியாகவும் மத்திய அரசு தனியாகவும் கல்வி ஆலோசனைக் குழுக்கள் அமைத்து அவற்றினுடைய அறிவுரைகளின்படி விதிமுறைகளை அறிவிக்கிறார்கள்; மாற்றுகிறார்கள். பள்ளி நிர்வாகமும் ஆசிரியப் பெருமக்களும் மாணவர்களும் செய்வது அறியாது தடுமாறுகிறார்கள்.

மத்திய அரசு தனியாக ஒரு குழுமம் அமைத்து விதிமுறைகள் வெளியிடுகிறார்கள். அரசியல்வாதிகளுக்குள்ளும் மாநில மத்திய அரசுகளுக்கும் யாருக்கு அதிகாரம் என்பதில் தெளிவு இல்லாமல் அறிக்கையை வெளியிட்டுக்கொண்டு மாணவர்கள் எதிர்காலத்தைக் கெடுத்து வருகிறார்கள். கல்வித் துறை மாநில அரசுக்கு உட்பட்டதா? இல்லையா என்பதில் பெருத்த போராட்டம் நடைபெறுகிறது.

காலங்களை வீணாகக் கழித்துவிட்டு விழித்தவுடன் பறக்க நினைத்தால் இயலக்கூடிய காரியமா? இந்தியப்பல்கலைக்கழகங்கள் உலகத்தரத்திற்கு இணையானது எதுவும் இல்லை என்ற உண்மை காலங்காலமாகத் தெரிந்திருந்தாலும் மந்திரத்தில் மாங்காய் காய்த்தது போல உடனடியாகப் பல்கலைக்கழகங்கள் தங்கள் திறமைகளை அதிகரித்து, புதுப்பித்து உலகத்தரத்திற்கு உயர்த்திக்கொள்ள வேண்டும் என்று மத்திய அரசும் மாநில அரசும் அறிக்கை வெளியிடுகின்றன. தரத்தை உயர்த்துவதற்குத் தேவையான விதிமுறைகள் கருவிகள் எதையும் அளிக்காமல் விரைவாக உடனடியாகத் தரஆய்விற்கு உட்பட்டுத் தர நிலையை நிருபிக்க வேண்டும் என்று கட்டளை

இடுகிறார்கள். இதனை உடனடியாகச் சாதிக்காவிட்டால் கல்லூரிகள் அருங்காட்சியகங்களாகவும் நூலகங்களாகவும் சேமிப்புக் கூடங்களாகவும் மாற்றப்படும் என்று செய்தித்தாள்களிலே அறிக்கை வருகிறது. பல்கலைக்கழக மானியக்குழு UGC கல்லூரி ஆசிரியர்களின் தகுதிகளை நிர்ணயித்துக் கீழ்க்கண்ட தகுதி உள்ளவர்களை மட்டுமே Ph.D, SET, NET நியமிக்க வேண்டும். இந்தத் தகுதி இல்லாதவர்கள் வேலையிலிருந்து அகற்றப்பட வேண்டும் என்று எளிதாக அறிக்கை வருகிறது. மேற்படி தகுதித் தேர்வுகளை ஆரம்பித்து வேண்டிய அளவு கால அவகாசம் கொடுத்து விதிமுறைகளை நடைமுறைப்படுத்தினால் நம்முடைய கல்வித்தரம் உயரும்; ஆசிரியர்களின் திறமை வளரும். அதைவிடுத்து உடனடியாக நடைமுறைப்படுத்த விரும்பினால் பல்லாயிரக்கணக்கான கல்லூரி ஆசிரியர்கள் வேலையை இழக்க நேரிடும். மேலும் 90% கல்லூரிகள் முறையாக நடத்தச் சிரமப்படும்.

மருத்துவக்கல்லூரியில் சேர நீட் தேர்விலே தேர்ச்சி பெற்று வரவேண்டும் என்ற விதிமுறை வரவேற்கத் தக்கது. மருத்துவர்கள் நோயாளிகளின் உயிர்க் காப்பாளர்கள். எனவே அத்துறையில் உள்ளவர்கள் திறமையானவர்களாகவும் நல்ல அனுபவம் உள்ளவர்களாகவும் இருக்க வேண்டும் என்பது ஒப்புக்கொள்ளக்கூடிய காரணமே. ஆனால் நீட் தேர்வு எழுதுவதற்குத் தகுதிப்படுத்திக்கொள்ள வேண்டிய கட்டாயம் எல்லா மாணவர்களுக்கும் அவசியம் இல்லை. மருத்துவப் படிப்பிலே சேர்வதற்கு வசதியும் வாய்ப்பும் உள்ளவர்கள் 1% குறைவாக உள்ளவர்கள். அப்படிப்பட்டவர்களுக்காகக் கூடுதலாகச் சிலபாடங்களைப் பாடத்திட்டத்திலே சேர்க்கலாம். ஆனால் அதனை எல்லா மாணவர்களுக்கும் உகந்தது என்று கட்டாயப்படுத்துவது முறையல்ல. முன்பு கல்லூரிகளிலே சிறப்புத் தமிழ், Advanced English, Special chemistry என்று இருந்ததைப் போலத் தனிப்பாடத்திட்டத்தை ஏற்படுத்த வேண்டுமே ஒழிய எல்லா மாணவர்களையும் ஒரேயடியாகக் கட்டாயத்திற்கு உள்ளாக்கக் கூடாது. குறிப்பாக இந்த ஆண்டு பதினொன்றாம் வகுப்பிற்குரிய பாடத்திட்டம் மிகவும் கடினமாக உள்ளது என்று மாணவர்களும் ஆசிரியர்களும் கூறுகிறார்கள். பதினொன்றாம் வகுப்பிற்குரிய பாடத்திட்டங்களைப் பார்த்துப் பயந்தே சில மாணவர்கள் பதினொராம் வகுப்பில் சேர்வதற்கு மறுக்கிறார்கள். பாலிடெக்னிக் கல்லூரியிலே சேருகிறார்கள். இப்படி எதற்கும் ஒத்துவராத சட்டதிட்டங்களை அறிவித்து ஒட்டுமொத்தப் பள்ளி கல்லூரிக் கல்வியை அழிப்பதும்/ தரம் குறைப்பதும் மிக்க வருத்தத்திற்குரிய செயலாகும். கல்வியாளர்கள் இதனை ஆராய்ந்து பார்த்துச் செய்ய முடிந்ததைச் செய்வார்களாக.

*ஸ்ரீ சற்குருநாதன் துணை*

## சித்த ஞானம் (தொடர்ச்சி)

### (காப்பியக் கவிஞர் நற்றமிழ் நாவலர். நா.மீனவன்)

### தாண்டவராயக் கோனார் கூற்று

இவர் இடையர் ஆதலின் ஆயர்களை முன்னிலைப்படுத்திக் கீழ்க் காணும் கண்ணிகளைப் பாடுகின்றார். தாண்டவராயக் கோனார் என்பவர் பாடுவதாகப் பாடல்கள் அமைந்துள்ளன.

*ஆயிரத்துஎட்டு வட்டமும் கண்டேன்*
*அந்த வட்டத்து உள்ளே நின்றதும் கண்டேன்*
*மாஇரு ஞாலத்து நூற்றெட்டும் பார்த்தேன்*
*மந்த மனத்துஉறும் சந்தேகம் தீர்ந்தேன்* 20

விளக்கம் - ஆயிரத்து எட்டு அண்டங்களையும் நான் கண்டேன். அந்த அண்டங்களுக்கு உள்ளே நீ நின்றதையும் கண்டேன். (இறைவனை முன்னிலைப் படுத்திக் கூறுவது) இப்பெரிய உலகில் உனது தாண்டவங்கள் நூற்றியெட்டையும் பார்த்தேன்; அதனால் என் மனத்தில் எழுந்த ஐயங்கள் அனைத்தும் தீர்ந்தன.

*அந்தக் கரணம் எனச்சொன்னால் ஆட்டையும்*
*அஞ்ஞானம் என்னும் அடர்ந்தவன் காட்டையும்*
*சந்தத் தவம்என்னும் வாளினால் வெட்டினேன்*
*சாவாது இருந்திடக் கோட்டையும் கட்டினேன்* 21

விளக்கம் - அந்தக் கரணம் என்பது மனமாகிய உட்கருவி என்பதாகும். அதனை ஆடு என்கின்றார் இடைக்காடர். இவர் இடையர் ஆதலால் மனத்தை ஆடு என்று கூறுகிறார். ஆடு அங்குமிங்கும் சென்று மேயும் இயல்புடையது. அது போலவே மனமும் அங்கும் இங்குமாக அலையும். மனம் செல்லும் இடம் அஞ்ஞானம் என்னும் வலிய காடு. அவற்றை அழகிய தவம் என்கின்ற வாளினால் வெட்டினேன். இறப்பின்றி இருக்கக் கோட்டை கட்டினேன். அதாவது அலைபாயும் மனத்தைத் தவம் செய்து அடக்க வேண்டும் என்பது உட்கருத்து.

*மெய்வாய்கண் மூக்குச் செவியெனும் ஐந்(து) ஆட்டை*

*வீறும் சுவைஒளி ஊறு ஓசை யாம்காட்டை*
*எய்யாமல் ஓட்டினேன் வாட்டினேன் ஆட்டினேன்*
*ஏக வெளிக்கு உள்ளே யோக வெளிக்கு உள்ளே* 22

**விளக்கம்** – மெய்வாய் கண் மூக்கு செவி என்று சொல்லக் கூடிய ஐந்து ஆட்டையும் சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும் காட்டினுள் தளராமல் ஓட்டினேன். அவற்றை வருந்தச் செய்தேன். ஒரே வெளியாக இருக்கின்ற காட்டிற்குள் மனந்தளராமல் யோகம் என்ற வெளிக்குள் ஓட்டினேன்.

*பற்று இரண்டும்அறப் பண்பு உற்றேன் நண்புஉற்றேன்*
*பாலையும் உட்கொண்டேன் மேலையாம் கண்கண்டேன்*
*சிற்றின்பம் நீக்கினேன் மற்று இன்பம் நோக்கினேன்*
*சிற்பரம் சேர்ந்திட்டேன் தற்பரம் சார்ந்திட்டேன்* 23

**விளக்கம்** – அகப்பற்று புறப்பற்று என்ற இரண்டும் முழுமையாய் நீங்கிட நற்பண்பாகிய ஞானத்தை அடைந்தேன். அதனால் ஆஞ்ஞை என்கின்ற மேல் நிலையை அடைந்தேன். சிற்றின்பத்தை நீக்கினேன். பேரின்பத்தை எண்ணிப் பரம்பொருளிடம் சேர்ந்தேன். சிவமாக ஆனேன்.

*அண்ணாக்கை ஊடே அடைத்தே அமுது உண்ணேன்*
*அந்தரத் தரத்தை அப்பொழுதே எண்ணேன்*
*விண்ஆளும் மொழியை மேவிப்பூ சைபண்ணேன்*
*மெய்ஞ்ஞானம் ஒன்று அன்றி வேறு ஒன்றை நண்ணேன்* 24

**விளக்கம்** – வாசியோக முறையால் உள் நாக்கை அடைத்து மூலாதாரம் என்கின்ற அமுதை உண்ணேன். ஆஞ்ஞை என்னும் மேல் நிலையை அடைய அப்பொழுது நினைக்க வில்லை. விண்ணையும் ஆள்கின்ற மொழியைக் கொண்டு வழிபாடு செய்யேன். உண்மை அறிவு ஒன்றைத் தவிர வேறு ஒன்றையும் நினைக்கவில்லை.

*மண்ஆதி பூதங்கள் அனைத்தையும் கண்டேனே*
*மாய விகாரங்கள் யாவையும் விண்டேனே*
*விண்ஒளி மொழியை மெய்யின்உள் கொண்டேனே*
*மேதினி வாழ்வினை மேலாக வேண்டேனே* 25

**விளக்கம்** – மண் நீர் வான் காற்று நெருப்பு ஆகிய பூதங்கள்

ஐந்தையும் கண்டேன். மாயை என்னும் விகாரத் தன்மையை விட்டொழித்தேன். வானத்தில் ஒளிவடிவாய் விளங்கும் இறையை உள்ளத்தில் வைத்தேன். உலக வாழ்வை மேலானதென்று விரும்பேன்.

*வாக்(கு) ஆதி ஐந்தையும் வாகாய்த் தெரிந்தேனே*
*மாயைசம் பந்தங்கள் ஐந்தும் பிரிந்தேனே*
*நோக்கரு நோக்கங்கள் ஐந்தும் புரிந்தேனே*
*நுவலும்மற்ற ஐந்(து) யோக நோக்கம் புரிந்தேனே* 26

விளக்கம் - ஓசை(வாக்கு) ஊறு ஒளி நாற்றம் சுவை முதலான ஐந்தையும் பற்றி அவற்றின் தன்மை பற்றி அறிந்து கொண்டேன். மாயை தொடர்பான ஐந்தையும் (மெய் வாய் கண் மூக்கு செவி) விலக்கினேன். நோக்கங்கள் ஐந்தையும் புரிந்து கொண்டேன். செவ்வாய் புதன் குரு சுக்கிரன் சனி என்ற ஐந்து கோள்களால் உண்டான யோகங்களையும் புரிந்து கொண்டேன்.

*ஆ(று) ஆ தாரத்தெய் வங்களை நாடு*
*அவர்க்கும் மேலான ஆதியைத் தேடு*
*கூ(று)ஆன வட்டஆ னத்ததில் கூடு*
*கோசம் ஐந்தும்கண்டு குன்(று) ஏறி ஆடு* 27

விளக்கம் - மூலாதாரம் சுவாதிட்டானம் மணிபூரகம் அநாகதம் விசுக்தி ஆஞ்ஞை என்ற ஆறு ஆதாரங்களுக்கு உரிய தெய்வங்கள் முறையே விநாயகர் நான்முகன் திருமால் உருத்திரன் மகேசுவரன் சதாசிவன் என்பன. இவற்றை நாடுக. ஆனால் அதை விட முழுமுதற் கடவுளைத் தேடு. அதனால் தோனறும் பேரின்பத்தில் கூடு. அன்னமய கோசம் பிராணமய கோசம் மனோமய சோகம் விஞ்ஞாகமாக கோசம் ஆனந்தமய கோசம் என்ற ஐந்து கோசங்களாகிய குன்றின் மேல் ஏறி ஆடு.

**நாராயணக் கோனார் கூற்று**

இடைக்காடர் யாதவர் குலத்தவர்; ஆதலின் பசுவை நோக்கிச் செல்வதாக மேலும் நாராயணக் கோனார் என்பவர் கூறுவதாகப் பாடியுள்ளார். இக்கண்ணிகளின் உட்கருத்து எதனையும் நினையாமல் பரம்பொருள் ஒன்றையே நினை என்பதாகும். பசு என்ற சொல் உயிரையும் குறிக்கும். ஆதலால் உயிரை நோக்கிக் கூறுவதாகவும் கொள்ளலாம்.

*ஆதி பகவனையே பசுவே! அன்பாய் நினைப்பாயேல்*
*சோதி பரகதிதான் பசுவே! சொந்தம் அது ஆகாதோ?* 28

விளக்கம் - பசுவே! முழுமுதற் கடவுளை நினை. அப்படி நினைப்பாயேல் ஒளி வடிவமான பரம்பொருள் உனக்குச் சொந்தமாய் ஆகாதோ? (ஆகும் என்பது கருத்து)

*எங்கும் நிறைபொருளைப் பசுவே! எண்ணிப் பணிவாயேல்*
*தங்கும் பரகதியில் பசுவே! சந்ததம் சாருவையே* 29

விளக்கம் – பசுவே! அங்கு இங்கு என்னாதபடி எங்கும் நிறைந்துள்ள பரம் பொருளை நினைந்து பணிவாயேல் மேலான கதியைத் தினந்தோறும் அடைவாய்.

*அல்லும் பகலும்நிதம் பசுவே! ஆதி பதம்தேடில்*
*புல்லும் மோட்சநிலை பசுவே! பூரணம் காண்பாயே* 30

விளக்கம் – பசுவே! இரவும் பகலும் முழுமுதற் கடவுளின் பாதங்களைத் தேடித் தழுவினால் உனக்கு மோட்சம் என்கின்ற முத்திநிலை முழுமையாய்க் கிடைக்காதோ? கிடைக்கும் என்பது கருத்து.

*ஒன்றைப் பிடித்தார்க்கே பசுவே! உண்மை வசப்படுமே*
*நின்ற நிலைதனிலே பசுவே! நேர்மை அறிவாயே* 31

விளக்கம் - பசுவே! ஒன்றாகிய பரம்பொருளைப் பற்றினால் உண்மையில் அது நமக்கு வசமாகும். நிலையாக நேர்மையாக நீ நின்றால் அதனை அறியலாம்.

*எல்லாம் இருந்தாலும் பசுவே! ஈசர் அருள்இலையேல்*
*இல்லாத் தன்மைஎன்றே பசுவே எண்ணிப் பணிவாயே* 32

விளக்கம் - பசுவே! எல்லாம் இருந்தாலும் பரம்பொருளின் அருள் இல்லையேல் இருந்தும் இல்லாத தன்மை என்று எண்ணிப் பணிக!

*தேவன் உதவிஇன்றிப் பசுவே! தேர்ந்திடின் வேறுஒன்றுஇல்லை*
*ஆவிக்கும் ஆவிஅதுஆம் பசுவே! அத்தன் திருவடியே* 33

விளக்கம் - பசுவே! உனக்குப் பரம்பொருளாகிய தேவனின் உதவி இன்றேல் வேறு ஒன்றால் உதவி பெற இயலாது. அத்தகைய அவனுடைய திருவடியே உனக்கு உயிராகும்.

*தாயினும் அன்பன் அன்றோ பசுவே! சத்திக்குள் ஆனவன்தான்*
*நேயம் உடையவர்பால் பசுவே! நீங்காது இருப்பானே* 34

விளக்கம் - பசுவே! தாயைக் காட்டிலும் மேலான அன்புடையவன் அவனே. சத்திக்குள் அவன் அடங்கியவனே. எவர் அன்புடையவரோ அவர்பால் அவன் அவரை விட்டு நீங்காதிருப்பான்.

*முத்திக்கு வித்துஆனோன் பசுவே! மூலப் பொருள் ஆனோன்*
*சத்திக்கு உறவுஆனோன் பசுவே! தன்னைத் துதிப்பாயே* 35

விளக்கம் - பசுவே! வீடுபேறு அடைவோர்க்கு அவனே மூலமாவான். சத்திக்கு உரிய சொந்தம் அவனே. அவனை நீ வணங்குக.

*ஐயன் திருப்பாதம் பசுவே! அன்புஉற்று நீபணிந்தால்*
*வெய்ய வினைகள்எல்லாம் பசுவே! விட்டுஓடும் கண்டாயே* 36

விளக்கம் - பசுவே! ஐயனின் அழகிய திருவடிமேல் அன்பு கொண்டு நீ வணங்கினால் வெம்மைதரும் தீ வினைகள் யாவும் உன்னை விட்டு ஓடும் என்பதைக் கண்டாய் அல்லவா?

*சந்திர சேகரன்தாள் பசுவே! தாழ்ந்து பணிவாயேல்*
*இந்திரன் மால்முதலோர் பசுவே! ஏவல் புரிவாரே* 37

விளக்கம் - பசுவே! சந்திரனைத் தலையில் தரித்த சந்திரசேகரன் ஆகிய சிவனுடைய திருவடிகளை நீ வணங்கினால் இந்திரன் திருமால் முதலான தேவர்கள் உனக்கு ஏவல் புரிவர்.

*கட்புலன் காணஒண்ணாப் பசுவே! கர்த்தன் அடிஇணையை*
*உட்புலன் கொண்டுஏத்திப் பசுவே! உன்னதம் எய்வாயே* 38

விளக்கம் - பசுவே! கண்ணால் காண இயலாத கடவுளின் இணையடிகளை உள்ளத்திலே நினைந்து போற்றினால் நீ மேன்மை அடைவாய்.

*கட்டியும் காணஒண்ணாப் பசுவே! கர்த்தன் அடிஇணையை*
*ஒட்டிப் பிடிப்பாயேல் பசுவே! உன்னை நினைப்பவர்யார்?* 39

விளக்கம் - பசுவே! கட்டிப் பிடித்தாலும் காண இயலாத கடவளின் அடியை நீ அவனை ஒட்டிப் பிடிப்பின் உன்னைப் பற்றி எண்ணுபவர் யார்? அவர்களால் உன் பெருமையை அளவிட இயலாது.

## அதிமதுர கவிகள் *(தொடர்ச்சி)*

காப்பியக்கவிஞர் நா. மீனவன்

**கடவுளைப் பற்றிப் பாடியவை**

காளமேகப் புலவர் தலங்களுக்குச் சென்றகாலை அங்குள்ள கடவுளரைப் போற்றிப் பாடிய பாடல்கள் பல. அவை புகழ்ச்சியாகவும் நிந்திப்பன போலவும் அமைந்தாலும் அவை இகழ்வன போலப் புகழ்தலே.

**அன்னம் இறங்கான் :**

கவிஞர் சிதம்பரம் சென்ற காலை அங்குள்ள கற்பக விநாயகரைப் பற்றிப் பாடிய செய்யுள் நிந்திப்பது போல இருப்பினும் அது புகழ்ச்சிப் பாடலே.

***கம்பமதக் கடகளிற்றான் தில்லை வாழும்***
***கணபதிதன் பெருவயிற்றைக் கண்டு வாடி***
***உம்பர்எலாம் விழித்திருந்தார் அயில்வேல் செங்கை***
***உடையஅறு முகனும்கண் ஈ(ரு) ஆ(று) னான்***
***பம்புசடர்க் கண்ணனுமோ நஞ்(சு) உண் டான்மால்***
***பயம்அடைந்தான் உமையும் உடல் பாதி ஆனாள்***
***அம்புவியைப் படைத்தி (டுவது) அவமே என்(று)***
***அயனும் அன்னம் இறங்காமல் அலைகின் றானே***

**விளக்கம்** – மதம் பொழியும் யானை முகத்தினை உடையவனாய்த் தில்லை மாநகரில் கோயில் கொண்டிருக்கும் கணபதியின் பெருவயிற்றைக் கண்டு வாட்டமுற்ற தேவர்கள் அனைவரும் கண் இமைக்காது கவலையுடன் இருந்தனர். கூரிய வேலாயுதத்தைக் கையிலே கொண்ட ஆறுமுகப் பெருமானும் பன்னிரண்டு கண் உடையவன் ஆனான். நெற்றிக் கண்ணிலே செருப்பை உடைய சிவபெருமானும் ஆலகால நஞ்சினை உண்டான். திருமாலோ (பயம்) பாற் கடலை அடைந்தான். கணபதிக்குக் பெருவயிறு இயல்பு. தேவர்கள் இமையா நாட்டத்தினர். முருகப் பெருமானுக்கு உண்மையிலேயே கண்கள் பன்னிரண்டு. திருமாலுக்கு இடம் பாற்கடல். சிவன் நஞ்சு உண்டதும் வரலாறே. சிவனின் இடப்பாகத்தில் உமை இருக்கின்றாள். நான் முகன் வாகனம் அன்னப் பறவை.

அனைத்தும் இயல்பானவையே. ஆனால் இவ்வாறு ஆனது கணபதியின் பெருவயிற்றைக் கண்டு என்று சமத்காரமாகப் பாடுகிறார் காளமேகம்.

பெருவயிறு என்பது மகோதரம் என்ற நோயைக் குறிக்கும். அதனால் பலர் வருந்தினர் என்பது உட்கருத்து.

**புலி ஆட்டை விட்டு நீங்குமோ?**

தில்லையிலே ஆடும் கூத்தப் பெருமானைப் போற்ற எண்ணிய காளமேகம் பெருமானின் ஆட்டத்தையும் அவர் அருகிலுள்ள புலிக்கால் முனி வரையும் பார்த்தபோது அவருக்கு ஒருகற்பனை தோன்றியது. அதனை ஒரு வெண்பாவின் வழி எடுத்துரைக்கின்றார்.

***நாட்டுக்குள் ஆட்டுக்கு நாலுகால் ஐயாநின்***
***ஆட்டுக்கு இரண்டுகால் ஆனாலும் - நாட்டம் உள்ள***
***சீர்மேவு தில்லை சிவனே! இவ் ஆட்டைவிட்டுப்***
***போமோசொலட லாய்அப் புலி.***

**விளக்கம் :** சிறப்புப் பொருந்திய தில்லைமா நகரில் கோயில் கொண்டிருக்கும் சிவனே! நாட்டில் ஆடுகளுக்குக் கால்கள் நான்கே. நின் ஆட்டுக்கோ இரண்டு கால்கள். ஆனால் விருப்பம் உள்ள இவ்வாட்டை விட்டுப் புலி நீங்குமோ? நீயே சொல்க.

வியாக்கிரபாதர் என்ற முனிவர் இறைவழிபாட்டிற்கு மலர் பறிக்க ஏதுவாகத் தன் கால்கள் புலியின் கால்கள் போலாக வேண்டுமென விரும்பி ஆண்டவன் அருளால் புலியின் கால்களைப் பெற்றார். சிவபெருமான் ஆடுவதால் ஆட்டை எனக் குறிப்பிட்டார். ஆட்டைக் கண்டால் புலி அதனை அடித் துண்ண விரும்பும். அதனால் புலியை விட்டு ஆடு நீங்கும். ஆனால் வியாக்கிர பாதராகிய புலி சிவபக்தன் ஆதலாலும் எப்பொழுதும் அவன் நடனத்தை அருகிருந்து பார்க்கும் பேறு பெற்றமை கருதியும் இவ்வாறு பாடினார் புலவர்.

**சிவனே நீ ஏழையானால்**

சிவனை ஏழைபங்காளன் என்று திருவாசகம் பேசும். அதனைக் கருத்திற் கொண்ட காளமேகம் நிந்தாஸ்துதியாகப் பாடிய வெண்பா இது.

*தாண்டி ஒருத்தி தலையின்மேல் ஏறாளோ*
*பூண்டசெருப் பால்ஒருவன் போடானோ - மீண்(டு) ஒருவன்*
*வையானோ வில்முறிய மாட்டானோ தென்புலியூர்*
*ஐயாநீ ஏழை ஆனால்*

**விளக்கம் :** அழகிய சிற்றம்பலத்தில் வீற்றிருக்கும் பெருமானே! நீ ஏழையானால் ஒருத்தி தாண்டிக் குதித்துவந்து தலையின் மேல் ஏற மாட்டாளோ? ஒருவன் காலிலே போட்டிருக்கும் செருப்பாலே மிதிக்க மாட்டானோ? மற்று ஒருவன் வைய மாட்டானோ? வில் முறியும்படி அடிக்க மாட்டானோ?

சிவபெருமான் மேல் கங்கை இருப்பதைக் காட்டும் வகையில் தலைமீது இருப்பதைக் குறித்துப் பாடுகிறார். கண்ணப்ப நாயனார் சிவபெருமான் கண் இருக்குமிடம் அறியச் செருப்பால்மிதித்த வரலாற்றைப் பாடுகிறார். அருச்சுனன் பாசுபதாத்திரம் பெற வேண்டிச் சிவனை நோக்கித் தவம் செய்த போது சிவன் வேடனாக வந்தான். அவனைப் பார்த்தன் தனது கை வில்லால் அடித்தான் என்ற வரலாற்றைப் பாடுகிறார்.

**ஆடுவது எந்த உபாயம்?**

*கொங்கு உலவும் தென்தில்லைக் கோவிந்தக் கோன் இருக்கக்*
*கங்குல்பகல் அண்டர்பலர் காத்(து) இருக்கச் - செங்கையிலே*
*ஓ(டு) எடுத்த அம்பலவா ஓங்குதில்லை உட்புகுந்தே*
*ஆ(டு) எடுத்த(து) எந்த உபாயம்?*

**விளக்கம் :** தில்லையிலே கூத்தப் பெருமான் ஆடும் நடனத்தைக் கண்டு வியந்து பாடுகின்ற பாடல். கோவிந்தக் கோனார் இருக்கின்றார். அமரர் பலர் காத்திருக்கின்றனர். இப்படி இருந்தும் கையிலே ஓடு எடுத்த நீ தில்லையுள் புகுந்து ஆடுகின்றாயே. இது எந்த உபாயம்?

ஆடு - ஆட்டம் என்பதன் சுருக்கம். இங்கு சிவன் இத்தனைபேர் இருக்கையில் ஆட்டை எடுத்தது எந்தத் தந்திரத்தால்? என்று நகைச்சுவையாகப் பாடுகின்றார்.

**மான் கன்றின் செயல் :**

காளமேகப் புலவர் தில்லைக் கூத்தப் பெருமானைத் தரிசிக்கச்

சென்றார். அப்பொழுது அங்கிருந்த தில்லை மூவாயிரவர்களைச் சந்தித்தார். அப்பொழுது அவர்களில் சிலர் அவரை நோக்கிச் சிவபெருமான் கையில் இருக்கும் மான்குட்டி முகத்தையும் முன்னங்கால்களையும் மேலே தூக்கியவாறு நிற்பதன் காரணம் யாதோ? எனக் கேட்ட பொழுது புலவர் பாடிய வெண்பா இது.

*பொன்அம் சடைஅறுகம் புல்லுக்கும் பூம்புனற்கும்*
*தன்நெஞ்(சு) உவகைஉறத் தாவுமே - அன்னங்கள்*
*செய்க்கமலத்(து) உற்(று) உலவும் தில்லை நடராசன்*
*கைக்கமலத்(து) உற்றமான் கன்று.*

விளக்கம் : வயலிலே உள்ள தாமரை மேல் அன்னப்பறவைகள் உலவிக் கொண்டிருக்கும் வளமுடைய தில்லையில் சிவபெருமானின் கையாகிய பொன்னிறத் தாமரையில் பொருந்தியுள்ள மான்கன்று பொன்னிறச் சடாமுடியிலே அன்பர்கள் சாத்தியிருக்கும் அறுகம் புல்மேலும் கங்கை நீரிடத்தும் விருப்பம் கொண்டு அவற்றை அடைய விரும்பித் தாவுகின்றது.

**ஆட்டுக்கும் இசைந்தவர் :**

சிதம்பரத்தில் கூத்தப் பெருமான் சந்நிதியும் உள்ளது. அவருடைய பாதங்கள் நடராசர் நடம்புரியும் திருச்சபை நோக்கி இருப்பது கண்டு குறும்பு தோன்றப் பாடிய கவி இது.

*ஆட்டுக்(கு) இசைந்தவர் அம்பலவாணர் அவர்க்(கு) எதிரே*
*நீட்டிற்று மால்வட பாலில் கால்என நீநினையேல்*
*கூட்(டு) உற்ற முப்புரம் செற்றவர் தம்மைச் சுமந்(து) அலுத்த*
*மாட்டுக்(கு) என்னோ இடம் கால்நீட்டல் சொல்ல வழக்(கு) இல்லையே*

விளக்கம் : ஆடலுக்குப் பொருத்தமானவர் அம்பலவாணர். அவருக்கு எதிரே வடதிசையில் கால் நீட்டிய வண்ணம் கோவிந்த ராசப் பெருமாள் என்று தவறாக நினைக்காதே. சிரித்துப் புரமெரித்த சிவபெருமானைச் சுமந்து அலுத்த மாடாகிய திருமால் கால் நீட்டுவதற்கான இடம் எது? என்று அறிவதற்காகவே தெரியுமோ. எனவே குற்றம் கூறுதல் நமக்கு வழக்கம் இல்லையே.

சிவபெருமான் திரிபுரம் எரிக்கச் சென்றபோது அவரைச் சுமக்கும் மாடாகத் திருமால் இருந்தார். அவரைச் சுமந்தலுத்து வடதிசையில் கால் நீட்டினார். இது குற்றம் ஆகாது.

**அம்பலவாணர் எளியவர் :**

வில்லால் அடியுண்டார். செருப்பால் மிதியுண்டார். ஒருவனின் கல்லால் அடியுண்டார் பிரம்பால் அடிபட்டார். இவை அவருக்கு எளிதாயிற்று. இவருக்குத் தந்தை இருந்தால் இவ்வாறு நடக்குமோ? இறைவன் தான் தோன்றி அவன் அடியார்க்கு எளியன் என்பதை உணர்த்துகின்ற கவி இதோ.

***வில்லால் அடிக்கச் செருப்பால் உதைக்க வெகுண்(டு) ஒருவன்***
***கல்லால் எறியப் பிரம்பால் அடிக்கக் காசினியில்***
***அல்ஆர் பொழில்தில்லை அம்பல வாணற்(கு) ஓர் அன்னைபிதா***
***இல்லாத தாழ்(வு) அல்ல வோஇங்ஙனே பெரி(து) ஆனதுவே.***

**விளக்கம் :** மரங்கள் செறிந்து விளங்கும் சோலைகள் நிறைந்த தில்லையிலே அம்பலத்தில் ஆடிக்கொண்டிருக்கும் கூத்தனுக்கு இவ்வுலகில் ஓர் தாய் தந்தை இல்லாத தாழ்வினால் அல்லவோ ஒருவன் வில்லால் அடிக்கவும் ஒருவன் செருப்பால் மிதிக்கவும் சினங்கொண்டு ஒருவன் பிரம்பால் அடிக்கவும் ஆன நிலைகள் எளிதாயின. தாய் தந்தை இருந்தால் இத்தகைய செயல்கள் நிகழுமோ?

வில்லால் அடித்தவன் அருச்சுனன்; செருப்பால் மிதித்தவன் கண்ணப்பன்; பிரம்பால் அடித்தவன் அரிமர்த்தன பாண்டியன்.

**எது பரம்பொருள்?**

தில்லையில் நடராசர் சந்நிதிக்கு அருகிலேயே கோவிந்தராசப் பெருமாள் சந்நிதியும் உள்ளது. காளமேகம் தில்லை வாழ் கூத்தனை வணங்கிக் கொண்டிருந்த பொழுது கோவிந்தராசப் பெருமாள் சந்நிதியைச் சார்ந்த நம்பியார் ஒருவர் திருமாலே பரம்பொருள் என்றார். அதைக் கேட்ட காளமேகம் பாடிய பாடல்.

***சத்(து)ஆதி ஐந்தையும் தாங்காத தெய்வம் தனிமறையும்***
***கர்த்தா எனும் தெய்வம் அம்பலத் தேகண்டு கண்கள்இரு***

*பத்(து) ஆன வன்மைந்தன் பொய்த் தேவியைக் கொல்லப் பார்த்(து) அழுத*
*பித்(து) ஆனவன்தனை யோதெய்வம் ஆகப் பிதற்றுவதே?*

**விளக்கம் :** ஒலி தொடு உணர்ச்சி வடிவம் சுவை மணம் ஆகிய தன்மாத் திரைகள் ஆகிய உடம்பை ஒருபோதும் அறியாத இறைவன் பிறப்பிலி என்பதை ஒப்பற்ற நான்மறைகளும் தமக்கு அவனே முதல்வன் என்று வணங்கும் முழுமுதற் கடவுளாகிய பெருமானைச் சிற்றம்பலத்தில் கண்டு தொழுதபின் இருபது கண்களை உடைய இராவணனின் புதல்வனாகிய இந்திர சித்தன் மாயையினாலே பற்றப்படாததும் பிறவியற்றதும் ஆகிய முழுமுதல் மாயைக்குக் காரணமான உடலை எடுத்துப் பிறந்தவனும் மாயா சீதையை அவன் கொல்லக் கண்டு மயங்கி அழுதவனும் ஆகி அம்மாயைக்கு உட்பட்ட ஒருவனை நாம் தெய்வம் என்று கூறி வணங்குவது பொருத்தமோ, இதுவும் நிந்தா ஸ்துதியே.

**மேளமேன்? ராஜாங்கமேன்?**

தில்லைச் சபாநாயகர் பிச்சாடன வடிவுடன் திருவீதி உலா வருகின்ற வருக்கு முன் எக்காளம் முழங்க யானை செல்கின்றது. இடி போல மேள தாளங்கள் முழங்குகின்றன. குடை கொடி முதலான அரசாங்க விருதுகள் செல்கின்றன. இது ஏன்? என்று கேலியாகப் பாடுகின்றார்.

பிச்சை எடுக்க செல்பவனுக்குத் திருவுலாவரும போது அவனுக்கு அரச மரியாதைகள் தேவை என்பது கருத்து.

*நச்(சு) அரவம் பூண்ட தில்லைநாதரே தேவரீர்*
*பிச்சை எடுத்(து) உண்ணப் புறப்பட்டும் - உச்சிதமாம்*
*காளம் ஏன் குஞ்சரம்ஏன் கார்க்கடல் போல் தான்முழங்கும்*
*மேளம்ஏன்? ராசாங்கம் ஏன்?*

**சிவனும் அரங்கனும் :**

சிதம்பரம் நடராசப் பெருமானைப் போற்றிய அதே செய்யுளைத் திருவரங்கம் சென்ற பொழுது அரங்கனையும் போற்றிப் பாடினார். இருகடவுளர்க்கும் ஏற்பப் பாடிப் பொருள் உரைத்துப் பாடிய செய்யுள் இது.

*இருந்தாரை கேள்வனை ஓங்கும் அராவை எழுபுனலைத்*
*திருந்தாரை வன்னியை முடிமுடித் தோன்செய்ய வேளைப்பண்டு*
*தருந்தாதை நாயகன் சுந்தரன் தூதன் சமரில் அன்று*
*பொருந்தார் புரந்திட்ட தீப்போல் மதியம் புறப்பட்டதே*

**விளக்கம் :** சிவபெருமான் அழகினால் சிறப்புற்ற தாரையின் விருப்பத்திற்கு உரியவனான சந்திரனையும் படமெடுத்து ஆடும் பாம்பினையும் எழுகின்ற புனலான கங்கையினையும் தலையில் சிறந்த ஆத்தி மாலையினையும் வன்னி மலரையும் முன்னாளில் திருமுடியில் சூடிக் கொண்டோன் செய்யவேள் முருகனுக்குத் தந்தையானவன் உலகினுக்கெல்லாம் ஒரு நாயகன் சுந்தரருக்காகத் தூது நடந்தவன் அன்று பகையானவர்களின் திரிபுரங்களை எரித்தவன். அவற்றை எரித்த தீயைப் போன்ற கொடுமையுடன் அதோ சந்திரன் கீழ்வானத்தே செவ் வொளி பரப்பி எழுந்தது.

**திருமால்** – பெருமை மிக்க தாரையின் கணவனான வாலியையும் ஓங்கி வளர்ந்த மராமரத்தையும் ஏழ் கடலையும் வன்னியெனும் அரக்கனையும் முன்னாளிலே அழித்தவன் திருமால். சிறந்த மன்மதனை முன்னாளில் பெற்ற தகப்பனும் ஆவான். அவனுடைய தூதனாகிய மாருதி பகைவனாகிய இராவணன் ஊராகிய இலங்கையில் இட்ட தீப் போன்ற கொடுமையுடன் சந்திரன் இப்போது.

சந்திரன் உதித்த போது தலைவனைப் பிரிந்த தலைவி இவ்வாறு சந்திரனைப் பார்த்துப் புலம்புவதான துறையைப் போன்றது.

**நடராசனின் நாடகசாலை**

தில்லை நடராசப் பெருமானின் உடைமைகள் யாதோ? அவன் உமையை மணந்து எப்படிக் குடித்தனம் நடத்துகின்றானோ? என்ற கருத்தில் பாடிய செய்யுள் இது.

*ஏறு கட்டிய கொட்டில் அரங்கமே*
*ஈர்இ ரண்டு முகன்வாய் இலாயமே*
*மாறுகண் ணப்பன் வாய்மடைப் பள்ளியே*
*வாய்த்த ஓடை திருமால்வ தனமே*
*வீறு சேர்சிறுத் தொண்டன்இல் லாள்உந்தி*

*வேட்ட நற்கறி காய்க்கின்ற தோட்டமே*

*நாறு பூம்பொழில் சூழ்தில்லை அம்பலம்*

*நாரி பாகற்கு நாடக சாலையே..!*

விளக்கம் - ஒரு பாகத்தில் பெண்கொண்ட பெருமானுக்கு வாகனமாகி காளையைக் கட்டியிருக்கும் கொட்டில் திருவரங்கம். மறையோதும் நான் முகனின் வாயே குதிரைலாயமாகும். வேடனாக இருந்து அடியவனாக மாறிய மடைப்பள்ளியாகும். தாமரை பொருந்திய ஓடையே திருமாலின் திருமுகம். சிறப்புடைய சிறுத்தொண்டரின் மனைவியினுடைய திருவயிறே விருப்பமான காய்கறிகள் காய்க்கும் தோட்டம் ஆகும்.

(தொடரும்...)

## இறையருள்

(பேராசிரியர், த.ரா. குருமூர்த்தி, வணிகவியல் துறை, அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி)

அவரவர் தாம் வணங்குகின்ற தெய்வத்தினைத் தமது உள்ளத்தில் இடம் பெறச் செய்து வருவதை இறையருள் பெற்றதாக எடுத்துக் கொள்ளலாம். இறைவன் குடிபுகக் கூடிய உள்ளம் பரிசுத்தமாக இருக்க வேண்டும். உள்ளம் பெருங்கோவில் ஊன், உடம்பு, ஆலயம் என்றிருக்க வேண்டும். இம்மையே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன். எங்கு எழுந்து அருளுவது இனியே என மாணிக்க வாசகர் சொல்வது போல இறைவனை நாம் சிக்கெனப் பிடிக்க வேண்டும். அதற்குரிய இறையருள் நமக்கு வேண்டும். இறையருளைத் தேட வேண்டும். இறையருள் பெறுவதற்கேற்ப நம்மைத் தயார் படுத்திக் கொள்ள வேண்டும். இறையருள் என்பது மிகப் பெரிய வரப்பிரசாதமாகும். இறையருளால் ஆணவம், மாயை, கன்மம் ஆகிய மன அழுக்குகள் தீரும். பிறர்க்காக வாழும் மனப்பக்குவத்தை இறையருள் தரும். அழுதால் உன்னைப் பெறலாமே என மாணிக்கவாசகர் விளக்குகின்றார். மனித மனம் இறைவனை நோக்கி உருகினால் இறையருள் கிட்டும். அழல்சேர் மெழுகு ஒப்ப ஐயாற்று அரசே ஆசைப்பட்டேன் எனத் திருவாசகம் சொல்கின்றது. மெழுகுவர்த்தி தீச்சுடரோடு சேர்கின்ற போது பிறர்க்கு உழைக்கிறோம் எனப் பெருமை கொள்கிறது. மனிதன் இறைவனோடு சேர்கிற போது தானும்

உயர்கின்றான். சமுதாயத்தையும் உயர்த்துகின்றான். நமச்சிவாயவே ஞானமும் கல்வியும் என்று சொல்கிறார் திருநாவுக்கரசர். மனிதன் ஞானம், கல்வி ஆகியவற்றோடு சேர்கின்ற போது, சமுதாயத்தில் உயர்வினைப் பெறுகிறான்.

இறையருள் பயணத்தில் மனிதன் தன்னை உணரும் பக்குவம் பெறுகிறான். தன் பிழைகளை உணர்கிறான். தம்மை அறிந்து கொள்பவர்களுக்கு இறைவன் துணை நிற்கிறான் எனத் திருமந்திரம் சொல்கின்றது.

*தாமறிவார் அண்ணல்தாள் பணிவார் அவர்*
*தாமறிவார் அறம்தாங்கி நின்றார் அவர்*
*தாமறிவார் சிவதத்துவர் ஆவர்கள்*
*தாமறிவார்க்குத் தமர் பரன் ஆமே.*

தன்னை அறிந்தவர்கள் இறைவனின் திருத்தாள் பணிவார்கள். தன்னை அறிந்தவர்கள் தம்வாழ்வில் அறம் தாங்கி நிற்பார்கள். தன்னை அறிந்தவர்கள் சிவத் தத்துவத்தில் திளைத்திருப்பார்கள். தம்மை அறிந்தவர்க்கு இறைவன் உறவினர் எனத் திருமூலர் தம்மை அறிந்தவர்களின் சிறப்பினை விளக்குகிறார்.

தம்மை உணர்ந்து தமது பிழைகளை உணர்ந்து, எனது பிழைகளையெல்லாம் பொறுத்தருள்வாய் எனப் பட்டினத்தார் இறைவனிடம் வேண்டுகிறார்.

*கல்லாப் பிழையுங் கருதாப் பிழையுங் கசிந்துருகி*
*நில்லாப் பிழையும் நினையாப் பிழையும் அஞ்செழுத்தைச்*
*சொல்லாப் பிழையுந் துதியாப் பிழையுந் தொழாப் பிழையும்*
*எல்லாப் பிழையும் பொறுத்தருள் வாய்கச்சி ஏகம்பனே.*

இறையருள் பயணம் எவ்வாறு இருக்க வேண்டும் எனத் திருமுறைகள் நமக்கு விளக்குகின்றன. இறைவன் எப்பொழுது நம் உள்ளத்தில் குடிகொள்கிறான். நம்மைச் செவ்வனே வழிநடத்துகிறான் என்பதனைத் திருமுறைகள் விவரிக்கின்றன. மனிதமனம் எப்பொழுது இறைவனுக்குக் கோவிலாகிறது என்பதை அப்பர் கீழ்க்காணும் பாடலில் விளக்குகின்றார்.

*சகமலாது அடிமை இல்லை தானலால் துணையும் இல்லை*
*நகமெலாம் தேயக் கையால் நாள்மலர் தொழுது தூவி*

*முகமெலாம் கண்ணீர் மல்க முன்பணிந்து ஏத்தும் தொண்டர்*
*அகமலால் கோயில் இல்லை ஐயன் ஐயாறனார்க்கே.*

உலகம் முழுவதும் இறைவனுக்கு உரியது. இறைவன் அன்றி வேறுதுணை தமக்கு இல்லை எனக்கருதி நகமெலாம் தேயப் பூக்கள் பறித்துத் தொடுத்து இறைவனுக்குப் படைத்து இறைவனைத் தொழுது மலர் தூவி, இறைவனை நோக்கி உருகி முகமெலாம் கண்ணீர் மல்க நிற்கும் தொண்டனின் மனமே இறைவனுக்குக் கோயில் என அப்பர் தெளிவுபடுத்துகின்றார். இறைவனை நோக்கி உருகினால் இறையருள் சாத்தியம் என்பது அப்பரின் வாக்கு. தூய்மையை நோக்கி உருகினால் நாமும் தூய்மையாகிறோம். இறையருள் வையத்துள் வாழ்வாங்கு வாழும் வாழ்வினைத் தரவல்லது.

இறைவனை நோக்கி மனம் உருகினால் இறையருள் பெற முடியும் என்பதை இராமலிங்க அடிகளாரும் தமது திருவருட்பாவில் உணர்த்துகின்றார்.

*நினைந்து நினைந்து உணர்ந்து உணர்ந்து*
*நெகிழ்ந்து நெகிழ்ந்து அன்பே நிறைந்து நிறைந்து*
*ஊற்றெழும் கண்ணீர் அதனால் உடம்பு*
*நனைந்து நனைந்து அருளமுதே*
*நன்நிதியே ஞான நடத்தரசே*
*என்னுரிமை நாயகனே என்று*
*வனைந்து வனைந்து ஏத்துதும் நாம்*
*வம்மின் உலகியலீர் மரணமிலாப்*
*பெருவாழ்வில் வாழ்ந்திடலாம் கண்டீர்*
*புனைந்துரையேன் பொய்புகலேன் சத்தியம்*
*சொல்கின்றேன் பொற்சபையில் சிற்சபையில்*
*புகுந்தருணம் இதுவே*

நம்மை வழிநடத்தும் மெய்ஞான ஒளியாகிய இறைவனை எப்பொழுதும் நினைத்துக் கொண்டிருக்க வேண்டும். அந்த நினைப்பை உணர வேண்டும். அந்த நினைப்பினால் நெகிழ வேண்டும். இறைவன் மீது செலுத்துக் கூடிய அன்பினால் உள்ளம் நிறைந்திருக்க வேண்டும். இறைவனை நோக்கி அன்பினால் உருகி நிற்கும் போது ஊற்றுப் போல்

எழுந்து வரும் கண்ணீரால் உடம்பு நனைய, அருளமுதே, நன்நிதியே, ஞான நடத்தரசே, என் உரிமை நாயகனே என்று அழைத்து வனைந்து இறைவனைத் தொழுது வணங்குகின்ற போது, நாம் இறையருள் பெறுகிறோம். மரணமிலாப் பெருவாழ்வு பெறுகிறோம். இது புனையப்பட்டதல்ல. பொய் அல்ல. சத்தியம் ஆகும். பொற்சபையிலும் சிற்சபையிலும் வீற்றிருக்கும் இறைவனைத் தேடி உடனே செல்க என இராமலிங்க அடிகளார் இறையருளின் மகத்துவத்தை விளக்குகிறார். இறையருள் மரணமிலாப் பெருவாழ்வு மனிதனுக்குத் தரும் என்பதை உணர்த்துக்கின்றார். எண்டகு சிற்றம்பலத்தே எந்தை அருள் அடைமின் இறவாத வரம் பெறலாம் இன்பமுறலாமே என இராமலிங்க அடிகளார் இறையருளின் உன்னதப் பயனை விளக்குகின்றார்.

இறையருள் பெறுவதற்கு மனிதன் தம்மை எவ்வாறு பக்தியின் பால் உயர்த்திக் கொள்ள வேண்டும் என்பதனை மாணிக்கவாசகர் கீழ்க்காணும் பாடலில் விளக்குகின்றார்.

*மெய்தான் அரும்பி விதிர்விதிர்த்து உன்விரையார் கழற்கு என்*
*கைதான் தலைவைத்துக் கண்ணீர் ததும்பி வெதும்பி உள்ளம்*
*பொய்தான் தவிர்த்து உன்னைப் போற்றி சயசய போற்றி என்னும்*
*கைதான் நெகிழவிடேன் உடையாய் என்னைக் கண்டுகொள்ளே.*
*யான்ஏதும் பிறப்பு அஞ்சேன் இறப்பதனுக்கு என்கடவேன்*
*வானேயும் பெறில் வேண்டேன் மண்ணாள்வான் மதித்தும் இரேன்*
*தேனேயும் மலர்க் கொன்றைச் சிவனே எம்பெருமான் எம்*
*மானே உன்அருள் பெறுநாள் என்று என்றே வருந்துவனே*
*ஆடகச்சீர் மணிக்குன்றே இடையறா அன்புஉனக்கு என்*
*ஊடகத்தே நின்றுஉருகத் தந்தருள் எம்உடையானே*

செடியிலிருந்து பூவிற்கான அரும்பு உதிப்பது போல, மனித மனம் இறைவனுக்காக உதிக்க வேண்டும். மனதிலும் உடலிலும் ஓர் புத்துணர்வு உருவாக வேண்டும். இறைவனின் திருவடியை நாடி, கூப்பிய கைகளைத் தலைமீது வைத்துக் கண்களில் கண்ணீர் ததும்பி வெதும்பி நிற்க வேண்டும். உள்ளத்தில் இருளாகிய பொய் இருக்கக் கூடாது. இறைவா உன்னைப் போற்றி வணங்குகிறேன். கூப்பிய கைகளை நெகிழ விடமாட்டேன். உடையாய் என்னையும் கண்டுகொண்டு அருள்வாயாக என மாணிக்கவாசகர் இறைவனிடம் வேண்டுகிறார். நான், எனது என்கிற பொய் உள்ளத்தை விட்டு நீங்கும்

போது அந்த உள்ளம் இறைவனை நோக்கி உருகும். அத்தகு உள்ளம் கொண்டவன் இறையருள் பெறுவான். ஆடகச்சீர் மணிக்குன்றே, இறைவா உன்மீது இடைவெளியற்ற தடையற்ற அன்பு கொண்டுள்ளேன். என் உள்ளத்திலே நீ வந்து தங்க வேண்டும். உன்னை நினைத்து உருக எனக்கு அருள் தருவாயாக என இறைவனிடம் மாணிக்கவாசகர் வேண்டுகிறார்.

முகமெலாம் கண்ணீர் மல்க முன்பணிந்து ஏத்தும் தொண்டர் எனத் தேவாரம் சொல்கிறது. ஊற்றெழும் கண்ணீர் அதனால் உடம்பு நனைந்து என இராமலிங்க அடிகளாரின் திருவருட்பா சொல்கிறது என் கைதான் தலைவைத்துக் கண்ணீர் ததும்பி வெதும்பி என மாணிக்கவாசகரின் திருவாசகம் சொல்கிறது. இறைவன்பால் அன்பு கொண்டு மனம் அன்பினால் உருகி கண்ணீரால் முகமும் உடம்பும் நனைகின்ற போது, நமது உருகிய மனத்தில் இறைவன் குடிகொள்கிறான். இறையருள் நம்வசப்படுகின்றது. மனிதன் பிறவிப்பயன் பெறுகின்றான். இறையருளால் மனிதனுக்கு வீடுபேறு கிட்டுகின்றது.

தாயுமான சுவாமிகள் இறைவனது பெருமைகளை வரிசைப்படுத்தி, அருளாற்றலை விவரித்து, அத்துணை அருளாற்றல் பெற்ற இறைவன் தன்னை ஒருநிலைப்படுத்தி தனது மனதைப் பக்குவப்படுத்தி, இறைவன் மீது அன்பால் உருகிநிற்க ஒரு மந்திரம் பண்ணுவது இறைவனுக்கு அப்படியொரு கஷ்டமானகாரியமா, அருமைமிகு செயலா எனக் கூறும் வண்ணம் கீழ்க்காணும் பாடலைத் தந்துள்ளார்.

*ஆழாழி கரையின்றி நிற்கவிலையோ*
*கொடிய ஆலம் அமுதாக விலையோ*
*அக்கடலின் மீது வடவன் நிற்கவில்லையோ*
*அந்தரத்தில் அகிலகோடி தாழாமல் நிலைநிற்க வில்லையோ*
*மேருவும் தனுவாக வளையவிலையோ*
*சப்தமேகங்ளும் வச்ரதரன் ஆணையிற் சஞ்சரித்திட வில்லையோ*
*வாழாது வாழவே இராமன் அடியால் சிலையும் மடமங்கை*
*ஆகவிலையோ*
*மணிமந்திரம் ஆதியால் வேண்டும் சித்திகள் உலகமார்க்கத்தில்*
*வைக்கவிலையோ*

*பாழான என்மனம் குவிய ஒருமந்திரம் பண்ணுவது உனக்கு*
*அருமையோ*
*பார்க்கும் இடமெங்கும் நீக்கமற நிறைகின்ற பரிபூரண ஆனந்தமே.*

ஆழமான கடலினைக் கரையின்றி நிற்க வைத்தாய். கொடிய நஞ்சினை அமுதம் ஆக்கினாய். கடலின் மீது வடவனை நிற்க வைத்தாய். ஆகாயத்தில் உள்ள அண்டங்கள் கோடி கவிழாமல் நிலைகொள்ளச் செய்தாய். மேருமலையை வில்லாக வளைத்தாய். இந்திரன் ஆணையினால் சப்த மேகங்களையும் சஞ்சரித்திட வைத்தாய். இராமனது காலடிபட்டுக் கல்லாய் நின்ற அகலிகையை மடமங்கை ஆக்கினாய். தனது மணிமந்திரங்களால் உலகம் உய்ய தேவைப்படும் சித்திகளை உலகத்தில் வைத்தாய். இத்தகு அருமைகளைப் படைத்த இறைவா, பாழாய்ப்போன என்மனம் உன்னையே நினைத்து உன்பக்கம் இறைவா, பாழாய்ப்போன என்மனம் உன்னையே நினைத்து உன்பக்கம் குவிய ஓர் மந்திரம் பண்ணுவது உனக்கு அரியசெயலா, பார்க்கும் இடமெங்கும் நீக்கமற நிறைகின்ற பரிபூரண ஆனந்தமே எனத் தாயுமான சுவாமிகள் இறைவனிடம் வேண்டுகின்றார். இறைவனை உணர்ந்தவர்கள், இறைவன் மீது நம்பிக்கை கொண்டு மனம் உருகி நிற்பவர்கள் இறையருள் பெறுவர் என்பதைத் தாயுமானவரின் பாடல் உணர்த்துகின்றது. யானே பொய், என் நெஞ்சும் பொய், என் அன்பும் பொய். ஆனால் வினையேன் அழுதால் உனைப் பெறலாமே. தேனே அமுதே கரும்பின் தெளிவே தித்திக்கும் மானே அருளாய் அடியேன் உனைவந்து உறுமாறே என்கிறார் மாணிக்கவாசகர். மனமுருகி அழுதால் இறைவனைப் பெறலாம். இறையருள் பெற்று வினையேன் அடியேன் ஆகலாம்.

## பட்டினத்தார் பைந்தமிழ் - 23

தமிழாகரர் தெ. முருகசாமி
(மேனாள் முதல்வர் - இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி)

தமிழ் நாடளவில் பட்டினத்தாரைப் போலத் துறந்தார் யாரும் இல்லை எனலாம்.

பாரனைத்தும் பிள்ளையைப் போல் ஆரும் துறக்கை அரிதரிது.
என்றார் தாயுமான அடிகள்.

மக்களொடு மகிழ்ந்து மனையறங்காத்து மிக்க காமத்து வேட்கைத் துறந்துழி, தலைவனும் தலைவியும் தம்பதி நீங்கி, சிறந்தது பயிற்றல் என்பதே துறவு எனத் தமிழ்த் துறவுக்கான இலக்கணத்தை நாற்கவிராச நம்பி என்பார் கூறியுள்ளார். எனினும் இந்த இலக்கண வரையறைக்கு முற்றிலும் மாறுபட்டது பட்டினத்தார் துறவு என்பதே தாயுமானார் கருத்தாகும்.

ஏனெனில் மிக்க காமத்து வேட்கைத் துறந்துழி துறவு மேற்கொள்ளாமல் இல்லறத்தில் இருக்கும் துய்ப்புணர்களுக்கிடையிலேயே பட்டினத்தார் துறந்தார் என்பது தான் பட்டினத்தார் துறவின் அருமைப்பாடாகும். இதைத் தான் வள்ளுவரும் தெளிவாகக் கூறுகையில்,

*வேண்டின் உண்டாகத் துறக்க துறந்தபின்*
*ஈண்டியற்ட பால பல. (342)*

என்றார். அதாவது ஆன்மா ஆக்கம் பெற வேண்டின் ஒருவர் தம்மிடமிருக்கும் போதே துறந்து விடல் சிறப்பாம். அங்ஙனம் தம்மிடமுள்ள பொருள் மீது பற்றினைத் துறந்தால் துறந்த அந்நிலையிலேயே நன்மை பலவாக உண்டாகுமாம் என்கிறார் வள்ளுவர்.

இந்தச் சூழலைப் பற்றி வடலூர் வள்ளலாரும் தாம் திருமணம் செய்த நாளிலேயே துறந்த துறவை நினைப் பிப்பார் போலக் கீர்த்தனைப் பாடல் ஒன்றில் கீழ்வருமாறு பாடுகிறார்.

*வீட்டுக் காசை படுவோரை*
*வீட்டை விட்டுத் துரத்தியே*
*வேட்டாண்டி யாய் மிகவும்*
*ஒட்டாண்டி யாக்கு வார்க்கு...*
*தெண்டனிட்டேன் என்று சொல்லடி...*

வீட்டாரின் கட்டாயத்திற்காகத் திருமணம் புரிந்த கொண்டாலும் முத்தர் மனம் இருக்கும் மோனத்திலே என்றபடி ஆன்மாவின் நிலையறிந்த ஆண்டவன் அவ் ஆன்மாவை வீட்டை விட்டுத் துரத்தி விடுமாம் என வள்ளலார்தம் அனுபவத்தை வெளிப்படுத்திய உண்மை, பட்டினத்தார் போன்ற வாழையடி வாழையானவர்களின் வாழ்க்கைப் பாடம் எனலாம். இந்நிலையில் அமைந்தது தான் பட்டினத்தார் துறவு.

இத்தகு துறவை மேற் கொண்டாலும் அதாவது இல்லறத்தைத் துறந்தாலும் உலகியல் நடையிலிருந்து துறவாதவர்களாய் தமது அனுபவத்தை உலகியல் மீது ஏற்றிக் கூறாமல் உலகியலின் துன்பியல் வாழ்வைத் தம் மீது ஏற்றி உரைப்பதாகவே கூறி உலகியலைத் திருத்த முயற்சிப்பதில் காணும் சுகத்தையே துறவின் பயனாகத் துறவிகள் கருதியுள்ளனர் என்பதை அவரவர்தம் பாடல்களால் உணர முடிகிறது.

எடுத்துக் காட்டாக வள்ளலார் படமுடியாது இனித் துயரம் பட்டதெல்லாம் போதும் எனக் கூறுவதும் அடித்தது போதும் அணைத்திடல் வேண்டும் எனக் கூறுவதும் அவர் தாம்பட்டதான அனுபவத்தைக் கூறாமல் உலகியலார் படும் துன்பத்தைக் கொண்டு கூறுவதெல்லாம் உலகியலைத் திருத்த வேண்டி எடுத்துக் கொண்ட தாயுள்ள முயற்சி எனலாம். இது தான் துறவு அல்லது தவத்திற்கான அடையாளமாகும்.

மேற்படியான கருத்தை அதாவது உலகியலைத் தம்மீது ஏற்றி உரைத்துக் கொள்வதான பண்பை அய்யன் திருவள்ளுவர் தவம் என்ற அதிகாரத்தின் ஒரு குறளில் பதிவு செய்கிறார்.

தம் உணர்வை அடக்கிக் கொள்வது மட்டுமே தவமன்று அதற்கும் மேலாக உலகியலை விட்டு விலகாமல் மக்களிடம் காணும் முன்னேற்றத்திற்குத்தடையாக உள்ள உணர்வை மாற்றிச்சீர் செய்து நன்மையைப் பெருக்குமாறு செய்வதே உண்மைத் தவம் என்கிறார் வள்ளுவர்.

வாசி கூடி வளிநிலை துறந்து, காவி உடுத்தியவராய்க் காட்சி தருவதற்கும் மேலான மாட்சிமை உடையதே தவம் என்பது கருத்து.

*ஒன்னார் தெறலும் உவந்தாரை ஆக்கலும்*
*எண்ணின் தவத்தான் வரும். (264)*

துறவோ தவமோ உடையவர்கள் குடும்பத்தைவிட்டு விலகினாலும் குவலயத்தை விட்டு விலகாதவராய் இருந்து பிரபஞ்சத்தின் துன்பங்களைக் களையவேண்டித் தம்மை ஆயத்தப்படுத்திக் கொள்பவரே உண்மைத் தவசியாம் என வள்ளுவர் மேற்கண்ட குறளால் தெளிவு படுத்துகிறார்.

பிரபஞ்சத்தைப் பகையுணர்வே ஆட்டிப் படைக்கிறது. யான் எனது எனும் மமதையால் பிரபஞ்சம் பாழ்பட்டுக் கிடக்கிறது. இந்தப் பகை உணர்வை அழிக்க வேண்டும் என்பதைத்தான் ஒன்னார்த் தெறலும் எனப்பட்டது.

ஈண்டு ஒன்னார் என்றது மாறுபட்ட உணர்வுடையாரைக் குறித்தாலும் அவர்களை அழிப்பதைவிட அவர் மேற்கொண்ட பகை உணர்வை என்பதாகப் பொருள் கொள்ள வேண்டும். பகை உணர்வை மாற்றி விட்டால் பகைவர் என்பவரே இல்லாமல் ஆகிவிடுவர் என்பது கருத்து.

இப்படிப் பகையை மாற்றிய அளவில் மட்டுமின்றி உவந்தாரை ஆக்கலும் வேண்டும் என்பது வள்ளுவரின் எதிர்பார்ப்பாக உள்ளது. ஈண்டு கூறப்படும் உவந்தார் என்பார் தமக்கு மட்டும் உவப்பானவர் என்பதாக இல்லாமல் பிரபஞ்சத்திற்குரிய நல்லது செய்வாரை உருவாக்குதல் என்ற கருத்தில் கூறப்பட்டதாக உணர வேண்டும்.

அதாவது பகை என்னும் தீமையைக் களைந்து விட்டதோடு விட்டு விட்டால் நன்மை வளருமா வளராதா என்ற ஐயத்திற்கு இடம் தராத நிலையில் நன்மையை உருவாக்க வேண்டும் என ஒரே கல்லில் இருமாங்காய் வீழ்த்தல் போல வள்ளுவர் பகை தெறல், நற்பண்பு உருவாக்கல் என்பதை நாணயத்தின் இருபக்கச் சிறப்பாகக் கூறினார்.

இந்த அடிப்படையான உணர்வுகளின் பதிவாகவே பட்டினத்தார் சமூகத்தின் சலனங்களைத் தம்மீது ஏற்றிக் கொண்டு கீழ்க்கண்டவாறு பாடியுள்ளார்.

*அழலுக்குள் வெண்ணெய் எனவே*
*உருகிப்பொன் னம்பலத்தார்*
*நிழலுக்குள் நின்று தவம் உஞற்*
*றாமல்நிட் ரேமின்னார்*
*குழலுக் கிசைந்த வகைமாலை*
*கொண்டுகுற் றேவல்செய்து*
*விழலுக்கு முத்துவை யிட்டிறைத்*
*தேன்என் விதிவசமே !*

மனையற வாழ்வை முற்றுமாய் நீங்கித் தனித்து நிற்கும் பட்டினத்தார் கானல் நீர் போல் காம உணர்வுடன் வாழும் மாந்தர்களைத் திருத்த வேண்டி அப்பழியைத் தாம் செய்வதாகக் கூறிக் கொண்டு கூறுகையில், பொன்னம்பலம் என மனம் உருகி வழிபடாமல் தோன்றி மறையும் மின்னல் போன்ற இல்லற சுகத்தையே பெரிதாகப் போற்றிப் பாழாக விழலுக்கு நீர் இறைப்பதாக வாழ்கிறேனே எனத் தமக்குத்தாமே நொந்து கொள்கிறார்.

இதில் விழலுக்கு முத்துவை இறைப்பு என்பது புது உவமையான ஒன்றாகும்.

ஔவையார் பாடலில் கூறும் நெல்லுக் கிறைத்த நீர் வாய்க்கால் வழியோடிப் புல்லுக்கும் ஆங்கே பொசியுமாம் என்பதில், பயன்படக் கூடிய நெல்லேயன்றிப் பயன்படாதெனக் கூறப்படும் புல்லும் நீராலே பயன்பெறும் போது அது (அட்டில்) விலங்குகளுக்கு உணவாகலாம் என்ற கருத்தில் கூறப்பட்டதான கருத்துச் செறிவு உள்ளது.

ஆனால் பட்டினத்தார் கூறும் விழல் என்றது, எந்தப் பயன்பாட்டிற்கும் உதவியாக இல்லாததற்கு நீர்பாய்ச்சுவதால் யாதுபயன் / எனக் கருதுவார் போல் உள்ளது.

புல்லானது பயன்படும் அளவிற்கு விழல் பயன்படாது. அதுபோலப் பிறர்க்குப் பயன்படாத வாழ்வால் என்ன பயன் ? என்பதை விளக்கவே முத்துலை இறைப்பு என்றார்.

எத்தனை முறை இறைத்தாலும் விழலால் எந்தப் பயனும் அமையப் போவதில்லை என்பதன் குறிப்பே முத்துலை என்ற சொற்பொருள் ஆகும்.

துலை என்பது நீர் இறைப்பதற்கான கருவியான கொப்பரையைக் குறிப்பது. ஆழமான கிணற்றிலிருந்து நீரைமேலே கொண்டுவர உதவியாக இருப்பது நீர்க் கொப்பரை.

ஆழமான கிணறு போன்றது பாழான பிரபஞ்ச வாழ்வு. இதில் உழன்று திரிந்து வாழ்வதால் பயனில்லை. தேர்ந்து தெளியாமல் வாழ்வு இல்லை என்பதை விளக்குவதற்காகவே பட்டினத்தார் பாடலின் தொடக்கத்தை வெண்ணெய் உருக்கத்தை நினைவு கூர்ந்தார்.

வெண்ணெய் உருகினால் உணவுக்கு நெய்யாய்ப் பயனாகும். அந்தப் பயனைத் தரும் வெண்ணெய் வந்தவித்தை ஆராய்ந்தால் அதுவும் சிறப்பான வழிமுறையை உடையதாகச் சிறப்பைத் தரும். கறந்தபால் - காய்ச்சப் பட வேண்டும் - பின்னர் ஆற வைத்து உறைமோராகப் பிரை குத்தப் பட வேண்டும். அதனால் கெட்டிப்பட்ட தயிரை மோராகச் சிலுப்பப்படும்போது வெண்ணெய் திரளும்.

ஒவ்வொரு படி நிலையிலும் ஒவ்வொரு வகையான பயன் உண்டு. காய்ச்சிய பால் உணவாகும். அதுவே தயிராகும் போதும் உணவாகும். அதுவே மோராகும் போதும் தாகம் தணிக்கும். இப்படி நெய்யின் உருக்கத்தைக் காண அமையும் ஒவ்வொரு நிலையும் ஒவ்வொரு பயனைத் தருதல் போல வாழும் வாழ்க்கையின் ஒவ்வொரு வளர்ச்சியும் பயன் உடையதாக இருக்க வேண்டும் என்பதையே பட்டினத்தார் வெண்ணெய் உருக்கத்தை நினைவு கூர்ந்தார். இங்ஙனம் உண்மை உணராமல் இப்பிரபஞ்சம் பாழாய் விழலுக்கு இறைக்கும் நீர், பயனாகாமல் போவது போல் அழிவது, வினைப் பயனேயன்றி வேறன்று என பிரபஞ்ச அவலத்திற்கு ஏங்குகிறார் அவர். மேலும் பொன்னம்பலவர் அடிசார்ந்து நாம் உய்ய வேண்டுமென்றே அறிவாரிலையே என்றும் ஏங்குகிறார்.

இப்படியெல்லாம் அலைந்து அவசமுறும் மாந்தர்க்குப் பட்டினத்தார், ஊட்டு விப்பானும் ஒன்றை மூட்டு விப்பானும் வினை காட்டு விப்பானும் ஆட்டு விப்பானும் அம்பலவன் என்பதால்

*அடியார்க் கெளியவர் அம்பல*
*வாணர் அடிபணிந்தால்*
*மடியாமல் செல்வ வரம்பெறலாம்*

என்றும் மறவாதிரு மனமே அம்பலவாணர் அடிக்கமலம் அது காண் மருந்து உனக்கே என்றும் திருத்தில்லைத் தலப் பாசுரத்தின் பலசுருதியாகக் கூறி ஆன்மாவை நல்வழிப்படுத்தினார் என்பதாம்.

இனி, திருச்செங்காடு, ஒற்றியூர், இடைமருதூர், கழுக்குன்றம், காளத்தி, கயிலாயம், மதுரை போன்ற தலங்களில் தரிசித்த அனுபவத்தைக் காண்போமாக !

*(தொடரும்...)*

# திருக்குறள் தெளிவுரை

(ம. கார்மேகம்)

## குற்றம் கடிதல்
## குற்றங்களை நீக்குதல்

**1. செருக்கும் சினமும் சிறுமையும் இல்லார்**
**பெருக்கம் பெருமிதம் நீர்த்து.**

செருக்கும் - ஆணவமும்; சினமும் - கோபமும்; சிறுமையும் - சிறுமைக் குணங்களும்; இல்லார் - இல்லாதவர்; பெருக்கம் - செல்வப் பெருக்கு; பெருமிதம் நீர்த்து - பெருமைக்கான தன்மையை உடையது.

ஆணவமும் கோபமும் சிறுமைக் குணங்களும் இல்லாதவர்களின் செல்வப்பெருக்கு, அவர்தம் பெருமைக்கான தன்மையை உடையது.

**2. இவறலும் மாண்புஇறந்த மானமும் மாணா**
**உவகையும் ஏதம் இறைக்கு.**

இவறலும் - பொருள் கொடாத தன்மையும்; மாண்பு இறந்த மானமும் - மாட்சிமை இல்லாத மானமும்; மாணா உவகையும் - அளவில்லாத மகிழ்ச்சியும்; ஏதம் இறைக்கு - அரசனுக்குத் தீங்காகும்.

பொருள்கொடாத் தன்மையும் மாட்சிமை இல்லாத மானமும் அளவில்லாத மகிழ்ச்சியும் அரசனுக்குத் தீங்காகும்.

**3. தினைத்துணையாம் குற்றம் வரினும் பனைத்துணையாக்**
**கொள்வர் பழிநாணு வார்.**

தினைத் துணையாம் - தினையின் அளவினதாய்; குற்றம் வரினும் - குற்றம் வந்தாலும்; பனைத்துணையாக் கொள்வர் - அக்குற்றத்தைப் பனையின் அளவான குற்றம் என்று கொள்வர்; பழி நாணுவார் - பழியை அஞ்சுபவர்கள்;

பழியைக் கண்டு அஞ்சுபவர்கள் தம்மிடம் தினை அளவே குற்றம் வந்தாலும் அக்குற்றத்தைப் பனையின் அளவாகக் கருதுவார்கள்.

வரினும் - எச்ச உம்மை, பழிநாணுவார் - வேற்றுமைத் தொகை.

**4. குற்றமே காக்க பொருளாகக் குற்றமே**
**அற்றம் தரூஉம் பகை.**

குற்றமே காக்க பொருளாக - குற்றங்கள் வராமல் ஒரு பொருட்டாகக் காக்க வேண்டும்; குற்றமே - அந்தக் குற்றமே; அற்றம் தரூஉம் பகை -

அழிவைத் தரும் பகையாகும்.

ஒருவர்க்கு அழிவைத் தரும் பகை குற்றமே ஆகும். எனவே அக்குற்றத்தை ஒரு பொருளாகக் கருதித் தம்மிடம் ஏற்படாமல் காக்க வேண்டும்.

குற்றமே - பிரிநிலை ஏகாரம், காக்க - வியங்கோள் வினைமுற்று, தரூஉம் - இசைநிறை அளபெடை.

5. வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை எரிமுன்னர்
வைத்தூறு போலக் கெடும்.

வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை - குற்றம் வருவதற்கு முன்னர் அது வராமல் காக்காதவன் வாழ்க்கை; எரிமுன்னர் - நெருப்பின் முன்னர்; வைத்தூறு போலக் கெடும் - வைக்கோல் அழிவது போல அழிந்து விடும்.

குற்றம் வருதற்கு முன்னர் வராமல் அதனைக் காக்காதவன் வாழ்க்கை நெருப்பின் முன்னர் வைக்கோல் அழிவது போல அழிந்துவிடும்.

காவாதான் - வினையாலணையும் பெயர், கெடும் - வினைமுற்று.

6. தன்குற்றம் நீக்கிப் பிறர்குற்றம் காண்கிற்பின்
என்குற்றம் ஆகும் இறைக்கு.

தன்குற்றம் நீக்கி - தன்னுடைய குற்றத்தை நீக்கி; பிறர் குற்றம் காண்கிற்பின் - பிறகு பிறருடைய குற்றத்தைக் காண்பதனால்; என்குற்றம் ஆகும் இறைக்கு - அரசனுக்கு என்ன குற்றம் நேரப் போகிறது.

அரசன் தன்னுடைய குற்றத்தை நீக்கியபின் பிறருடைய குற்றத்தைக் காண்பதனால் அரசனுக்கு ஒரு குற்றமும் ஆகாது.

தன்குற்றம், பிறர் குற்றம் - ஆறாம் வேற்றுமைத் தொகை.

காண்கிற்பின் - பின் இடப்பொருளில் வந்தது.

7. செயற்பால செய்யாது இவறியான் செல்வம்
உயற்பால தன்றிக் கெடும்.

செயற்பால செய்யாது - செய்யத் தக்கவற்றைச் செய்யாமல்; இவறியான் செல்வம் - பொருள்மீது பற்றுக் கொண்டவனின் செல்வம்; உயற்பால தன்றிக் கெடும் - அவன் உய்வதற்கான வழியில்லாமல் அச்செல்வம் கெடும்.

செய்யத் தக்கனவற்றைச் செய்யாமல் பொருள் மீது பற்றுக் கொண்டவனின் செல்வம் அவன் உய்வதற்கான வழியில்லாமல் கெடும்.

**8. பற்றுள்ளம் என்னும் இவறன்மை எற்றுள்ளும்**
**எண்ணப் படுவதொன் றன்று.**

பற்றுள்ளம் என்னும் இவறன்மை - பொருளின் மீது பற்றுக் கொள்ளுதல் என்ற உலோபத் தன்மை; எற்றுள்ளும் - எந்த வகையான குற்றங்களிலும்; எண்ணப்படுவ தொன்றன்று - ஒன்றாக வைத்து எண்ணப்படும் ஒன்றாகாது.

பிறருக்குக் கொடுக்காமல் செல்வத்தின் மீது பற்றுக் கொண்டு விடாதிருத்தல் எந்த வகையான குற்றங்களிலும் ஒன்றாக வைத்து எண்ணப்பட மாட்டாது.

**9. வியவற்க எஞ்ஞான்றும் தன்னை நயவற்க**
**நன்றி பயவா வினை.**

வியவற்க எஞ்ஞான்றும் தன்னை - தன்னை எந்தக் காலத்திலும் மேலாக நினைப்பதை விட்டுவிட வேண்டும்; நயவற்க நன்றி பயவா வினை - தனக்கு நன்மை தராத வினைகளை விரும்பக் கூடாது.

தன்னை எந்தக் காலத்திலும் மேலாக நினைக்கக் கூடாது; தனக்கு நன்மை தராத வினைகளை விரும்பவும் கூடாது.

எஞ்ஞான்றும் - முற்றும்மை

வியவற்க; நயவற்க - எதிர்மறை வியங்கோள்.

**10. காதல காதல் அறியாமை உய்க்கிற்பின்**
**ஏதில ஏதிலார் நூல்.**

காதல - தான் விரும்பியவற்றை; காதல் அறியாமை - அவ்விருப்பம் பற்றி அறியாமலேயே; உய்க்கிற்பின் - பயன் கொள்ளுமானால்; ஏதில - தீங்காக மாட்டா; ஏதிலார் நூல் - பகைவருடைய தீய எண்ணங்கள்.

தான் விரும்பியவற்றை அவ்விருப்பம் பற்றி அறியாமலேயே பயன் கொள்ளுமானால் பகைவருடைய தீய எண்ணங்கள் அவனுக்குத் தீங்காக மாட்டா.



## திருவிளையாடற்புராணம் (தொடர்ச்சி)

## விடை இலச்சினை இட்டது

குலபூஷண பாண்டியன் மதுரையை ஆண்டுவந்த காலத்திலே காஞ்சிமா நகரத்தைக் காடுவெட்டிய சோழன் என்ற மன்னன் ஆண்டுவந்தான். அவன் காஞ்சிப்புற முள்ள காடுகளை வெட்டித் திருத்தி நகரம் கண்டதால் அப்பெயர் பெற்றான். அச்சோழ மன்னன் உத்தம சிவ பக்தர்களுக்குள்ளே உத்தமமான சிவபக்தன். திருநீறும், உருத்திராட்ச மாலையும் இலங்கிய மேனியான். சிவபெருமானே எல்லாவற்றுக்கும் மேலான பொருள் என்பதைத் தெரிந்து உறுதிகொண்டவன். வேத வேதாந்தகளை நன்றாக ஓதி உணர்ந்தவன். சிவபுண்ணியக் கதைகளை நாள்தோறும் செவிமடுப்பவன். சிவ லீலைகளைக்கேட்டு உளம் களி கூர்பவன்.

சோமசுந்தரப் பெருமானை மதுரை சேர்ந்து தொழ வேண்டுமென்று பெருங்காதல் கொண்டான், காடு வெட்டிய சோழன். நாளாக நாளாக மதுரைச் சொக்கநாதர்பால் கொண்ட பக்தி முருகியது. எப்போது நான் மதுரைப் பெருமானின் சேவடி காண்பேன்? என்ற சிந்தனையோடு ஓர் இரவிலே நித்திரை செய்தான். மதுரைப் பெருமான் சோழனது கனவிலே சித்தமூர்த்தியாகத் தோன்றி, சோழனே ! நீ பயம்கொள்ள வேண்டாம் மாறு வேஷம் போட்டுக்கொண்டு நீ தன்னந் தனியனாய் இன்றே புறப்பட்டு மதுரைக்குவா வந்து எம்மைத் தரிசனம் செய்து திரும்பலாம், என்று திருவாய் மலர்ந்தருளி மறைந்தார்.

காடுவெட்டிய சோழனும் சித்தப் பெருமானையும் அவர் திருமொழியையும் சிந்தித்தபடியே விழித்துணர்ந்தான். பெரிதும் வியப்படைந்தான். தன்னந்தனியாக அவ்விரவு நேரத்திலேயே தன் நகர் நீங்கி மதுரை நோக்கிப் புறப்பட ஆயத்தமானான். சிவ பக்தியைக் குதிரையாகக் கொண்டான், பஞ்சாக்ஷர மகா மந்திரத்தையே தனது உடைவாளாகக் கொண்டான். மதுரையை நோக்கித் தன் வழி ஏகினான். பலவகை நிலங்களையும், மலைகளையும், ஆறுகளையும் கடந்து வையைநதியின் கரையை வந்தடைந்தான். வையை நதியிலே வெள்ளம் பெருக்கெடுத்து ஓடிக்கொண்டிருந்தது. ஆற்றின் கரையிலே நின்று வெள்ளப் பெருக்கினைக் கண்டு கவலையோடு நின்றான் சோழன். சோமசுந்தரப் பெருமானைத் தரிசிக்க வந்த தருணம் பார்த்து இவ்வெள்ளப்பெருக்கு இடையூறாக வந்ததே கைக்கெட்டியது

வாய்க்கெட்டாது போய்விடுமோ? சூரியோதயம் ஆகி விட்டால் பகைவனான பாண்டியன் எனக்குத் துன்பம் இழைப்பான். பாண்டியனை மட்டுமே பகையாளி என்று எண்ணினேன். இந்த ஆறும் பகையாகிவிட்டதே, என்று கருதி மனம் நைந்தான்.

சோழனது பெருங் கவலையை நன்குணர்ந்த சிவ பெருமான் கருணை கொண்டு சித்தமூர்த்திக் கோலம்தரித்து அவன் பக்கத்திலே வந்து நின்றார். வையையாற்றிலே நீர் வற்றிப் போகும்படி கடாக்ஷம் செய்தார். வெள்ளம் வற்றியது. சோழ மன்னனைத் தன்னுடன் அழைத்துக்கொண்டு சித்தப்பெருமான் வையை நதியைக் கடந்து சென்றார். மதுரைக் கோட்டையை அடைந்து அதன் வடக்குவாசலைத் தன் திருவருளால்திறந்தார். உள்ளே புகுந்து கட்டுக்காவல் எல்லாம் மீறிப் பல வீதிகள் கடந்து திருக்கோவில் புகுந்தார். கோவிலிலுள்ள பொற்றாமரைத் தீர்த்தத்திலே சோழனை நீராடச் செய்தார். பிறகு உள்ளே சென்று சொக்கநாதரையும் மீனாக்ஷியம்மையாரையும் தரிசிக்கச் செய்தார். சித்த மூர்த்திகளின் திருவருளால் அம்மையாரைக் கண்ட சோழன் தூய்மையும் இன்பமும் நிரம்பப் பெற்றான்.

சுந்தரப் பெருமானையும் மீனாக்ஷி யம்மையாரையும் உளமாரத் தரிசனம் செய்த சோழன் பேரின்பத்திலே மூழ்கியவனாகி, முதல்வா போற்றி ! அடியவர்க் கெளியவனே போற்றி ! எளியவர்கள் எண்ணிய எண்ணியாங்கு எய்துமாறு அருள்புரியும் தனிப்பெரும் பொருளே, போற்றி ! என்று பல தோத்திரம் கூறித்துதித்தான். பல நல் வரங்களையும் வேண்டிப் பெற்றுக் கொண்டான்.

பின்னர் சித்தர் பெருமான் சோழனைப் பார்த்து மன்னவனே நீ இங்கு வந்துள்ள செய்தியைத் தெரிந்தால் பாண்டியன் உனக்கு இன்னல்செய்ய நேரிடலாம் என்று சொன்னான். பிறகு அவனை வந்தவாறே அழைத்துச் சென்று வடக்கு வாசல் வழியிலே இட்டுச் சென்று வையையின் வடகரையிலே சேர்த்தருளினார். அவனது நெற்றியிலே திருநீற்றைச் சாத்தி, உள்ளம் நிறைவு பெற்ற உனக்கு நல்ல துணை கிடைக்கும் என்று ஆசி கூறி வழியனுப்பினார். சித்தமூர்த்தி திரும்பிவந்து தான் முன்பு திறந்துகொண்டு வந்த வடக்குவாசற் கதவுகளை மூடி அதனிடத்தே ரிஷப மூர்த்தியை வைத்துத் தான் விமானத்துள் மறைந்தருளினார்.

விடிந்தது. மதுரைக் கோட்டையின் நான்கு வாசல்களும்

திறக்கப்பட்டன; வடக்கு வாசலிலே ரிஷபக்குறி இருந்ததைக் காவலாளிகள் கண்டனர். மற்ற வாசற் கதவுகளிலே மீனக்குறி இலங்கி நின்றபோது வடக்குப் புறக் கதவுகளிலே புதுக்குறி எப்படி வந்தது என்பது எவருக்குமே புரியவில்லை. இந்த நிகழ்ச்சி எதிலே சென்று முடியுமோ? என்று அஞ்சிய காவலாளிகள் ஓடோடியும் சென்று பாண்டியனை வணங்கி, மாமன்னரே ! நமது வடக்கு வாசற் கதவிலே இருந்த மீன் குறியை முற்றிலும் மாற்றி ரிஷபக் குறி இடம்பெற்றுள்ளது. இப்படித் துணிந்து செய்தது யார் என்பது எங்களுக்குத் தெரியாது மன்னிக்க வேண்டும் என்று சொல்லினர். பாண்டியனும் சென்று வடக்குப்புறக் கதவிலே விடை இலச்சினை இடப்பட்டிருப்பதைக் கண்டான். ஏதோ அற்புதம் அல்லவா நிகழ்ந்துள்ளது; இந்த மாயத்தைச் செய்தது யார்? ஏதும் விளங்க வில்லையே என்று சந்தேகப்பட்ட மனத்தவனாய் அரண்மனைக்குச் சென்றான்.

அன்று பகலில் பாண்டியன் உணவுகொள்ளவில்லை. இரவிலும் உணவு கொள்ளாமல் படுக்கையை வெறுத்துநிலத்திலே நித்திரை போனான். சிவபெருமான் கனவிலே தோற்றம் காட்டியருளினார். குணபூஷணா! காஞ்சிப் பதியிலுள்ள காடுவெட்டிய சோழன் நம்பால் நிரம்ப பக்தியுடையவன். அவன் மதுரைக்கு வந்து நம்மைத் தரிசித்து வணங்க விரும்பினான். நாம் அவனை வடக்கு வாசலைத் திறந்து உள்ளே கூட்டி வந்து தரிசனம் செய்வித்தோம். அவனை மீண்டும் வெளியே அனுப்பிவிட்டு கதவினைத் தாளிட்டு நமது விடைஇலட்சினையை இட்டோம் என்று திருமொழி பகர்ந்தருளினார்.

குணபூஷண பாண்டியன் விழித்தெழுந்தான். அவனது சந்தேகம் விலகியது. அஞ்சினான், வியர்த்தான். பூரிப்படைந்து பலவகைப் பாடல்களாலே சோமசுந்தரப் பெருமானைத் துதித்தான். பக்தனுக்காக எளிமையுற்று வந்த பெருமானின் பெருந்தன்மையை எண்ணி எண்ணிச் சிவானந்தத்திலே மூழ்கினான். சோமசுந்தரப் பெருமானின் திருச் சன்னதியை அடைந்து துதி செய்தான். எல்லாரிடத்திலும் எம்பெருமானது திவ்யத் திருவிளையாடலைச் சொல்லி மகிழ்ந்தான்.

பல நாட்கள் சென்றன. குலபூஷண பாண்டியன் தனது குமாரன் ராஜேந்திர பாண்டியன் வசத்திலே தனது கொற்றக் குடையையும் செங்கோலையும் மகுடத்தையும் அளித்துவிட்டுப் பேரமைதி கொண்ட உள்ளத்தோடு சிவலோகம் சேர்ந்தான்.

**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்

– பதிப்பாசிரியர்